NOVEMBER/DECEMBER 2024

**FTA11/CTA11 — இக்கால இலக்கியம் – 1 (கவிதை, உரைநடை, நாடகம், புதினம், சிறுகதை)**

Time : Three hours Maximum : 75 marks




பகுதி அ — (10 × 2 = 20 மதிப்பெண்கள்)

அனைத்து வினாக்களுக்கும் விடையளிக்க.

1. பாரதியார் சுட்டும் சிறந்த தமிழ்ப் புலவர்கள் மூவர் பெயரினைச் சுட்டுக.

2. தமிழை வளர்க்க வாணிகர் என்ன செய்ய வேண்டும்?

3. நல்ல தமிழில் எழுதுவோம் கட்டுரையின் ஆசிரியர் யார்?

4. மழை வரவை அறிவிக்கும் அஃறிணை உயிர்கள் இரண்டினைச் சுட்டுக.

5. பழையனின் மகள்கள் பெயர்களைக் கூறுக.

6. மாங்கனி எக்குலத்தைச் சார்ந்தவளாகப் படைக்கப்பட்டுள்ளாள்?

7. இமயம் அவர்களின் இயற்பெயர் யாது?

8. ஆறுமுகத்தின் பெற்றோர் பெயர்களைச் சுட்டுக.

9. மண் மணக்கும் சிறுகதைத் தொகுப்பில் இடம்பெறும் இரு கதைகளை ஆசிரியர் பெயர்களுடன் சுட்டுக.

10. மண் மணக்கும் சிறுகதைத் தொகுப்பின் தொகுப்பாசிரியர் பெயரினைச் சுட்டுக.

பகுதி ஆ — (5 × 5 = 25 மதிப்பெண்கள்)

அனைத்து வினாக்களுக்கும் விடையளிக்க.

11. (அ) பாரதியார் சுட்டும் தமிழின் சிறப்பினைப் புலப்படுத்துக.

(அல்லது)

(ஆ) தமிழை வளர்க்க பாரதிதாசன் கூறும் அறிவுரைகளைச் சுட்டுக.

12. (அ) உழவின் மேன்மையைப் புலப்படுத்துக.

(அல்லது)

(ஆ) பழங்காலத்து அணிகலன்கள் குறித்து விளக்குக.

13. (அ) மாங்கனியின் பாத்திரம் வழி பெண்ணியச் சிந்தனையைப் புலப்படுத்துக.

(அல்லது)

(ஆ) மாங்கனியில் இலக்கிய நயம் குறித்து விளக்குக.

14. (அ) ஆறுமுகம் தாய் மீது கொண்ட அன்பும் வெறுப்பும் குறித்துப் புலப்படுத்துக.

(அல்லது)

(ஆ) ஆரோவில் வருகையால் கிராமங்கள் அடைந்த மாற்றத்தினை விளக்குக.



15. (அ) மண் மணக்கும் சிறுகதைகளின் அழகியலைப் புலப்படுத்துக.

(அல்லது)

(ஆ) மண் மணக்கும் சிறுகதைகளின் கிராமப்புற வாழ்வியலை விளக்குக.

பகுதி இ — (3 × 10 = 30 மதிப்பெண்கள்)

எவையேனும் மூன்று வினாக்களுக்கு விடையளிக்க.

16. பாரதிதாசன் பிறமொழி தவிர்த்து தமிழை வளர்க்கக் கூறும் தன்மைகளைக் கட்டுரைக்க.

17. கலைச்சொல்லாக்கம் குறித்து கட்டரைக்க.

18. அடலேறு பாத்திரப்படைப்பை ஆய்க.

19. ஆறுமுகம் புதினம் வழி பெண்மையின் அவல நிலையைத் தெளிவுபடுத்துக.

20. மண் மணக்கும் கதைகளில் இடம்பெறும் சமூகம் குறித்து ஆய்க.

---